3rd November 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : குளிர்ப் பிரதேசத்தில் வேலையை சமவெளியில் செய்வதை விடத் திறமையாகச் செய்யலாம். ஆகையால் இதை மலைப் பிரதேசத்தைப் பொருத்த வரையில் உயர்த்துவதைப் பற்றி யோசிக்க முடியும்.

MR. SPEAKER : இப்போது 10 மணியாகிறது. இன்னும் 5 கேள்விகள் இருக்கின்றன. அவைகளை இன்னும் 5 நிமிட நேரம் எடுத்துக் கொண்டு முடித்து விடலாம்.

*Certain concessions to Christians among Backward Classes, Most Backward Classes and ex-Criminal Tribes.*

* 820-E. *Q.*—SRI V. SUBBIAH (on behalf of Sri T. Veluchami) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

ஹிந்து ஹரிஜனங்களுக்கு வழங்கப்படுகிற சலுகைகளில் சில கிருஸ்தவ ஹரிஜனங்களுக்கு விஸ்தரிக்கப்பட்டிருப்பது போல் ஹிந்து பின் தங்கிய வகுப்பினர், ஹிந்து மிகவும் பின்தங்கிய வகுப்பார், ஹிந்து மாஜி குற்ற பரம்பரையினர் இவர்களுக்குக் கொடுக்கப்படும் சலுகைகளில் சில கிருஸ்தவ பின்தங்கிய வகுப்பார், கிருஸ்தவ மிகவும் பின்தங்கிய வகுப்பார், கிருஸ்தவ மாஜி குற்றப் பரம்பரையினர் இவர்களுக்கு விஸ்தரிக்க எதேனும் உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : The position is as follows :—

*Backward Classes.*—There is no proposal under the consideration of this Government to extend to the Backward Class converts the concession now enjoyed by the Hindu Backward Classes.

*Most Backward Classes.*—Educational concessions are given to the Most Backward Classes without reference to the religion to which they belong.

*Ex-Criminal Tribes.*—So far as the Harijan Welfare Department is concerned, converts from ex-Criminal Tribes are given all educational concessions enjoyed by the Hindu ex-Criminal Tribes.

As regards Education Department, the question of extending the fee concessions to the converts from ex-Criminal Tribes is under the consideration of the Government.

SRI A. GOVINDASAMY : பின் தங்கிய வகுப்பிலிருந்தும், மிகவும் பின் தங்கிய வகுப்பிலிருந்தும் மதம் மாறிய கிருஸ்தவர்களுடைய பொருளாதார நிலையை அனுசரிக்கும்போது, அவர்கள் நிலை மிகவும் கஷ்டமானதாக இருக்கிறது. மதம் மாறிய ஆதித் திராவிடர்களுக்குக் கொடுப்பது போல இவர்களுக்கும் எல்லாச் சலுகைகளையும் கொடுப்பதற்கென்ன ? இதைப் பரிசீலனை செய்து அவர்களுக்கு எல்லாச் சலுகைகளையும் கொடுக்க சர்க்கார் தகுந்த நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நான் சொன்ன பதிலிலே இதைத் தான் சொல்லியிருக்கிறேன். மிகவும் பின் தங்கிய வகுப்பினர்களிலிருந்து மதம் மாறிய கிருஸ்தவர்களுக்கும் கொடுக்கப்படுகிறது, பின் தங்கிய வகுப்பினர்களுக்குக் கொடுக்கப்படுவது போல.

[3rd November 1958

SRI V. SUBBIAH : பிற்பட்ட சமுகத்தினருக்கும், குற்றப் பரம்பரையிலிருக்கக் கூடியவர்களுக்கும், பொருளாதார நிலையில் மதம் என்ன என்று அறியாத நிலையில் எல்லாச் சலுகைகளையும், கல்வி முதலிய எல்லாச் சலுகைகளையும் கொடுக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் இருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : மதம் மாறியவர்களுக்கு எல்லாச் சலுகைகளையும் கொடுக்க இயலாது. இப்போது கல்விச் சலுகை கொடுக்கப்படுகிறது என்று சொன்னேன். மிகவும் பின் தங்கிய வகுப்பினர்களுக்கும், எக்ஸ்-கிரிமினல் ட்ரைப்ஸுக்கும் கொடுக்கப்டும் இந்தக் கல்விச் சலுகை மதம் மாறியவர்களுக்கும், இப்போது ஹிந்து மதத்தில் இருப்பவர்களுக்கும் கொடுக்கப்படுகிறது.

### *Probation Officers*

* 820-F *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the list of thirty candidates selected by the Madras Public Service Commission for the posts of Probation Officers, as published in the *Fort St. George Gazette*, dated 4th June 1958, have been noted;

(*b*) when they were selected by the Madras Public Service Commission and when they were posted; and

(*c*) if they have not been posted so far, what the reasons are?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The candidates have not yet been appointed.

(*b*) The candidates were selected after an interview conducted by the Madras Public Service Commission during the months of February and March 1958. None of the candidates selected has been appointed so far.

(*c*) These candidates were selected for posts to be sanctioned under one of the plan schemes. The Government of India gave their concurrence to the scheme only in July 1958 and orders sanctioning 19 posts were issued on 13th October 1958. The candidates will now be appointed to the new posts in their turn.

### *Silk Industry in Gudiyatham taluk*

* 820-G *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வடாற்காடு ஜில்லா, குடியாத்தம் தாலூகாவில் உற்பத்தியாகும் பட்டு அபிவிருத்தி செய்ய சர்க்காருக்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. Proposals for the development of Silk Industry in Gudiyatham taluk by the establishment of a Training-*cum*-Production Centre in silk reeling and by supplying rearing equipments at subsidised rates to the Sericulturists in the area are under the consideration of the Government.